தெய்வப்புலமைத்

திருவள்ளுவர்

# திருக்குறள் ?

(பாட்டு)

பதிப்பாசிரியர் :

சென்னைப் பச்சையப்பன்

கலாசாலைத் தமிழாசிரியர்

மணி. திருநாவுக்கரசு முதலியார்

வெளியிடுவோர் :

வாவிள்ள ராமஸ்வாமி சாஸ்த்ருலு

அண்ட் ஸன்ஸ்

292, எஸ்பிளனேட், சென்னை.

1950





PRINTED BY
V. VENKATESWARA SASTRULU
of V. RAMASWAMY SASTRULU & SONS
AT THE VAVILLA PRESS
Madras.

உ

# திருக்குறள் புனைந்துரை

## பிறப்பு

தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனாரது பிறப்பு, வளர்ப்பு, பெற்றோர், கல்வி கற்பித்த ஆசிரியர் முதலியவற்றைப் பற்றிய நிகழ்ச்சிகள் ஒன்றும தெளிவாக விளங்க வில்லை. இப்பொழுது வழங்கும் வரலாறுகள் யாவும் பெரும்பான்மையும் கேள்வி வழியாகப் போந்தனவே அன்றிச் சிறந்த சான்றுகளைப் பற்றுக்கோடாகக் கொண்டெழுந்தன வல்ல. அவர் பிறப்பு, வளர்ப்பு முதலிய இரண்டொரு செய்திகளைக் குறிப்பாகக் காட்டுவன: 'கபிலரகவல்' 'ஞானமிர்தம்' 'தொல்காப்பிய உரைகள்' 'திருவள்ளுவமாலை' 'தனிப்பாடல்' ஆகிய இவைகளே

யாம். இவற்றுள் 'கபிலரகவல்' என்பது பிற்



காலத்துப் புலவர் யாரோ ஒருவரால் இயற்றப் பட்டதென்பது அதன்கண் உள்ள சொன்னடையையும் சங்கப் புலவராகிய கபிலர் பாடிய செய்யுட்களின் நடையையும் நோக்குவார்க்கு இனிது புலனாகும். இச் சிறு நூலில் திருவள்ளுவர் ஆதி என்னும் புலைச்சிக்கும், பகவன் என்னும் அந்தணனுக்கும் பிறந்ததாகவும்; அவருடன் அவ்வையார், உப்பை, உறுவை, கபிலர் முதலான எழுவர் தோன்றியதாகவும்; அம்மக்கள் ஒவ்வொருவரும் ஒவ்வோரிடத்தே வளர்க்கப்பட்டு வந்ததாகவும் கூறப்பட்டுள்ளது. இந்நூல் வடமொழிக்கண் உள்ள 'வச்சிர சூசி கோபநிடதம்' என்னும் நூற்பொருளைப் பெரிதும் தழுவிப் பிறப்பைப் பற்றிக் கூறும் சிறப்பை மறுத்துரைப்பது. இது, கபிலர் பிறரைப் பார்த்து, தன்மையிலேயே கூறியதாகக் காணப்படுகிறது. இதனை ஆதாரமாகக் கொண்டு யாதும் துணிந்துரைக்க இயலாது.

கபிலரகவல் திருவள்ளுவர்க்குத் தாய்தந்தையர் ஆவார் ஆதிபகவன் எனக் கூற, ஞானமிர்தம யாளித்த முனிவர் அவருக்குத் தந்தை யாவார் என உரைக்கும். ஞானமிர்தத்தின் ஆசிரியராகிய வாகீச முனிவரும கேள்வியைக் கொண்டே இக்குறிப்பைத் தமது நூலகத்தே பெய்துரைத்தாராகல் வேண்டும். திருவள்ளுவமாலையிலே 'வள்ளுவன் என்பானோர் பேதை அவன வாயச்சொற் கொள்ளாரறிவுடையார்' என்னும அடிகளில குறிப்பாக வள்ளுவர் இழி குலத்தாரெனத் தோன்றுதலால அவர் வள்ளுவர் குலததைச் சார்ந்தவர் என்ப.

இனி, வள்ளுவர் என்பார் 'யானைமீதிருந்து முரசு கடிப்பிட்டு அரசனாணை சாற்றுவோர்' என்று கம்பராமாயணம முதலியவற்றான் அறியப்படுதலான் அத்தகைய கருமத்தை உடைய வள்ளுவர் குலத்தினர் இவா என்பா. வள்ளு



வன் என்னும் பெயர் 'வள்ளுவன் சாக்கை யெனும் பெயர் மன்னர்க் குட்படு கருமத் தலை

வற் கொன்றும்' எனவரும் பிங்கல நிகண்டால் அரசர்க் குட்பட்ட கருமத் தலைவரைக் குறிக்கிறது. அன்றியும், அப்பெயர் நிமித்திகனையும் குறிப்பதாகச் சூடாமணி நிகண்டு கூறும். இனிச் சிலர் வள்ளுவர் என்னும மொழி வண்மையை உடையார் என்னும் பொருட்டு ஆதலின் அஃது அவருக்குக் காரணப் பெயரே ஆகும்; குலத்தைக் குறிப்பதாக மாட்டாது என்பர். இது பொருந்தாது: வண்மையை உடையோர் என்னும பொருளிலே 'வள்ளியோர்' 'வள்ளியார்' எனச் சொற்கள் வருமே அன்றி 'வள்ளுவர்' என வாராது.

இனி, வள்ளுவர் என்னு மொழி இயற்பெயரென்றே கொள்க. புறநானூற்றிலே 'நாஞ்சில வள்ளுவன்' என்னும் பெயரும், தாமிரசாச



னத்தில் 'சிறீவள்ளுவன் கோதை' எனச் சேர மன்னன் பெயரும், மலையாளத்திலே இன்றும் வள்ளுவனாடு என்றொரு நாட்டின் பெயரும் வழங்கிவருதல் காண்க. அன்றியும், 'சிறப்பி

ணாகிய பெயர்நிலைக் கிளவிக்கும் இயற் பெயர்க் கிளவி முற்படக் கிளவார்' என்னும் தொல்காப்பியச் சூத்திர உரையில் சிறப்புப் பெயருக்குப் பின் இயற்பெயர் வரும் என்பதற்கு உதாரணமாகச் சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் 'தெய்வப்புலவன் திருவள்ளுவன்' என்று காட்டியுள்ளார். இவற்றால் வள்ளுவர் என்பது இயற் பெயரே என்பதும் அது குலப்பெயராக மாட்டாதென்பதும் நன்கு தெளியப்படும்.

இனி, வள்ளுவர் எத்திணைப் பிறந்தவ ரென்பதையும் சிறிது ஆராய்வோம். வள்ளுவர் இழி குலத்தினராக இருப்பின் அவர் வடமொழிகளிலே உள்ள வியாழநீதி, சுக்கிரநீதி, சாணக்



கிய சாத்திரம், மனுநீதி முதலிய பல நூல்களையும் கற்றிருக்க இயலாது. ஏனெனில், அக்காலத்தே வடமொழி நூல்கள் இழிகுலத்தாரால் கற்கப்படுவனவல்ல. ஆதலின், அவர் உயர் குலத்தினராகிய அரசராதல் வேண்டும் என்பர் சிலர். அவர் 'தேவர்' என்னும் சொல் அரச

னைக் குறித்து, 'இராஜராஜ தேவர், சோழ தேவர், திரிபுவனதேவர்' என வழங்கி வருத லையும் தம் கொள்கைக்கு ஆதாரமாகக் காட்டு வர். தேவர் என்னும் சொல் மன்னர்க்கே அன்றி மன்னர் பின்னராகிய வேளாளருக்கும் வழங்கி வருகிறது. 'மெய்கண்ட தேவர்' என் புழிக் காண்க. சிறுத்தொண்ட தேவர், சீரா ளத் தேவர், கண்ணப்ப தேவர் என அடிய வர்க்கும் வழங்கபபட் டிருக்கின்றன. உலக வழக்கிலே தேவர் என்பது ஒரு குலத்தின ருக்குப் பட்டப் பெயராக இன்றும் வழங்கி வருகிறது. அன்றியும் திருத்தக்க தேவர்,



தோலாமொழித் தேவர் எனச் சமண முனிவர் கட்கும பெயராக வந்துள்ளது. ஆகலின் 'தேவர்' என்னும் சொல்லைக் கொண்டு திணையை ஒருதலையாகத் துணிதல் ஏலாது.

இனிச் சிலர், வள்ளுவர் மார்க்கசகாய முத லியார் என்பவர் மகளாகிய வாசுகி அம்மை யாரை மணந்து கொண்டாராதலின் அவர்

வேளாளரோ ஆதல் வேண்டும் என்பர். எவ்வாறாயினும் வள்ளுவர் என்னும் பெயர் குலத்தைக் குறிப்பதன்றென்றும், அஃது இயற்பெயரே என்றும், அவர் இழிகுலத்தினர் அல்லர் என்றும் கொள்க. அவர் அரச குலத்தினராகவோ, வேளாளராகவோ இருக்கலாம்.

## தெய்வப்புலமை

திருவள்ளுவர் தங்காலத்தே இருந்த செந்தமிழ் நூல்கள் பலவற்றையும் கற்றுத் தேர்ந்து



பரந்த புலமை வாய்ந்தவர்; அன்றியும், வடமொழியிலே உள்ள பலசிறப்பட்ட நூல்களையும் துறை போகக் கற்றுத் தெளிந்தவர்; சமண சமய நூல்களையும் பௌத்த சாத்திரங்களையும நன்குணர்ந்தவர். உலகியல் முற்றும் அறிந்தவர்; புலனெறி வழக்கம் யாவும் தெரிந்தவர். வள்ளுவர் இயற்றிய திருக்குறளிலே அவர் புலமையின் விரிவையும் தெளிவையும் புலப்படுத்தும் குறிப்புக்கள் நிரம்பியுள்ளன. திருக்குறளுக்கு உரை கண்டவருள்

ஒருவராகிய பரிமேலழகர் தமது உரைமுகத்தே அவற்றிற் சிலவற்றைக் காட்டிச் செல்கின்றார். கற்றறிவு ஒன்று மட்டும் சாலாது; கேள்விமட்டும் அமையாது. திருவள்ளுவர் எல்லா மேம்பட்ட அறிவினர்க்கும் மேலான அறிவினராகவும் விளங்கினார். இயற்கை அறிவும் பேராற்றலும் அமைந்திருந்தனர். புலமை வாய்ந்த பொதுமக்கள் யாவரினும் விறிய அறி



வாற்றல்கள் அவர்மாட்டுக் காணப்பட்டன. ஆதலினாற்றான் அவரைத் "தெய்வப் புலவன்" என எவரும் பாராட்டி மகிழ்வாராயினர். அவர் ஒருவருக்கே 'தெய்வப் புலவன்' என்பது உண்டு. ஏனையோர்க்கு இல்லை. இஃதொன்றே அவர் புலமை மாட்சியைத் தெரிப்பதற்கு அமையும்.

## இல்லறம்

திருவள்ளுவர் மனைவியார் வாசுகி அம்மையார் என்பவர் என்றும், அவர் கற்பிற் சிறந்த

வர் என்றும் கேள்விப்படுகின்ருேம். அவ் வம்மையார் கற்பை விளக்கும் அற்புதங்களுமுண்டு. வாசுகியார் இறந்தபின் வள்ளுவனுர் பாடியதாகப் பின்வரும் தனிப் பாடல் தமிழ் நாவலர் சரிதையிலே காணப்படுகின்றது :

'அடிசிற் கினியாளே அன்புடை யாளேப்
படிசொற் பழிநாணு வாளே—அடிவருடிப்

12 புனைந்துரை

பின் தூங்கி முன்னெழூஉம் பேதையை யான்
என் தூங்கும் என்கண் எனக்கு.' [பிரிந்தால்

தெய்வப்புலவர் இல்லறத்தைக் கைக்கொண்டொழுகினுர் என்பதும், அவர் நெய்தற்ருெழிலைத் தமது தொழிலாகக் கொண்டார் என்பதும், அடிப்பட்டு வருஞ் செய்திகளாதலினுனும், மறுக்கற் பாலன ஒன்றும அவற்றுள் இன்மையானும், அவை அங்ஙனே ஒப்புக்கொள்ளற் பாலனவாம். இவர் மாணுக்கர் ஏலேலசிங்கர் என்ப.

இவர் சமயத்தைப் பற்றிப் பலரும் பலவாறு கூறுவர். திருக்குறளைக் கொண்டே இவர் சமயம் இன்னதெனத் துணிதல் நேரியது. ஆதலின், அதனைக் கொண்டே தெளிய முயல்வோம். ஒரு சாரார் இவர் பௌத்த சமயத்



தைச் சார்ந்தவர் என்பர். அதற்கு அவர் கூறும் காரணங்கள் :—

1. அருளறமாகிய மேற்கோளைப் புத்தரைப் போலவே தமது நூலிலே யாண்டும் வற்புறுத்தியது.

2. கடவுள் வாழ்த்தில் வரும் 'அறவாழியந்தணன்' 'வாலறிவன்' முதலிய சொற்றொடர்கள் புத்தரைக் குறிக்கும் என்பது. அன்றியும், கடவுளைக் குறித்து வரும் சொற்றொடர்கள் எல்லாம் பொதுவாக நிற்றல். மும்மூர்த்திகட்கு உரிய பெயர்களுடனாதல், உரிய செயல்களினாலாதல் கூறப்படாமை.

வள்ளுவனார் தமக்கு உடம்பாடாக ஐம்பூதங்களையுங் கொண்டனர். பௌத்த சமயமோ

ஆகாயத்தை ஒப்புக்கொள்ளாமல் நான்கு பூதங்களையே உடன்படுவது வள்ளுவர் கொல்லாமையை வலியுறுத்தோதியது போன்றே புலா



லுண்ணாமையையும் வலியுறுத்திக் கூறினார். பௌத்தர் புலாலுண்ணாமையை அத்துணையாப்புறுத்துக் கூறவில்லை. புத்தமதக் கொள்கைகள் நாயனார் காலத்தே எங்கும்பரவியிருந்தன. அவற்றிற் சிறந்தனவற்றை நாயனார் கைக்கொண்டார். அன்றியும், புத்தமதக் கொள்கைகளில் ஒப்புக்கொள்ளத் தக்கன எல்லாம் வேதோபநிடதங்களிலும் ஆகமங்களிலும் கூறப்பட்டனவேயாகும். இக்காரணங்களால் வள்ளுவர் புத்த மதத்தினர் அல்லர் என்பது தேற்றம்.

இனி, ஒரு சாரார் சமணசமயமே வள்ளுவர் சமயம் என்பர். நாயனார் சமணசமய தருமங்கள் பலவற்றையும் தமது நூலிலே ஆண்டிருத்தலும் கடவுள் வாழ்த்திலே 'மலர்மிசை யேகி

ஞன்' 'என் குணத்தான்' 'பொறிவாயி லைந்தவித்தான்' முதலிய சொற்றொடர்கள் அருகனையே குறிப்பன ஆதலும் அதற்குக் கார



ணம் எனக் காட்டுவர். கடவுள் வாழ்த்திலே வரும் இச் சொற்றொடர்கள் பொதுவாக அனைவருக்கும் வழங்கும் சொற்களே யன்றி அருகனை மட்டும் குறிப்பன அல்ல. எண் குணங்கள் சிவபெருமானுக்கும் உள்ளன என்பது பரிமேலழகரானும் காட்டப்பட்டது. சமண அறங்களை நாயனார் கைக்கொண்டது உண்மையே. முன்னர்க் காட்டியபடி சிறந்தன எவற்றையும் நாயனார் எடுத்துக் கொண்டார். அவ்வொழுக்கங்கள் பொதுவானவைகளே; சமணசமயத்துக்கு மட்டும் சிறப்பானவை அல்ல. எத்தகைய சிறப்பொழுக்கமும் வள்ளுவனாரால் கூறப்பட்டிலது. வைதிக சமயத்திலே சொல்லப்படாதன இல்லை. ஆனால் சமண பௌத்த சமயங்களிலே ஒவ்வோர் அறமே மிகவும் வலியுறுத்தப்பட்டது. ஆதலின் வள்ளுவனார் சமணர் எனல் பொருந்தாது.

வள்ளுவர் வைதிகசமயத்தைச் சார்ந்தவர் என்பதற்கு ஆதாரங்கள் பல வுள. இந்திரன் முதலிய தேவர்களைப் பற்றியும், நான் மறையைப் பற்றியும், வேள்வியைக் குறித்தும், கூற்றத்தினின்றும் உய்தல், தென்புலத்தார் கடன் இறுத்தல், ஆவோம் புதல் ஆகிய இற்றைக்குறித்தும் தேவர் ஆன்டாண்டுக் கூறுதலின் அவர் வைதிகசமயத்தினராதல் செவ்வனம் தெளியப்படும். அன்றியும், அவர் சமணராயின் காமத்துப்பாலைக் கூறியிருக்கவே மாட்டார். சமணர் தென்புலத்தார்கடன் செய்தல் இல்லை எனச் சமண நண்பர் கூறு கின்றனர்.

இக்கூறியவாற்றான் வள்ளுவனார் வைதிக சமயத்தைச் சார்ந்தவர் என்பது துணியப் பட்டது. ஆயின் அவர் சைவரா, வைணவரா, என வினாக்கள் எழுதல் கூடும். வைணவர் 'தாமரைக்கண்ணானுலகு' 'அறவாழி அந்த

ணன்' 'அடியளந்தான் தாயதெல்லா மொருங்கு' முதலிய தொடர்மொழிகளைக் கொண்டு நாயனார் வைணவர் என்று கூறுவர். சைவர் 'என்குணத்தான்' என்பதைக் கொண்டும், அதன் உரையைக் கொண்டும், 'சார்புணர்ந்து சார்பு கெட வொழுகின்' 'பற்றுக பற்றற்றான் பற்றினை' என் றின்னோரன்ன திருக்குறட் செய்யுட்களைக் கொண்டும் வள்ளுவர் சைவரே என்பர். ஆனால் அவர் எல்லாச் சமயத்தாருக்கும் பொது நூலாகவே தமது அரிய நூல் விளங்க வேண்டுமெனக் கருதி அதனை இயற்றியுள்ளார் என்பது திண்ணம். இதனைப் பின் வரும் வெண்பா இனிது விளக்கும்:

'ஒன்றேபொருளெனின்வேறென்பவேறெனின்
அன்றென்ப ஆறு சமயத்தார்—நன்றென
எப்பா லவரும் இயைபவே வள்ளுவனார்
முப்பான் மொழிந்த மொழி.'

18 புனைந்துரை

## நாயனார் பெருமை

நாயனார் தமக்கு முன்னுள்ள நூல்களிற் சிறந்திருந்த பொருள்களை எடுத்துக்கொண்டாராயினும் அவருடைய மதி நுட்பத்தினாலே அவை ஒவ்வொன்றினிடத்தும் ஒட்டிக்கொண்டிருந்த மாசைத் துடைத்துப் பேரொளி வீசும்படி செய்தார். சமய வாதிகள் கூறியவற்றையும் அவ்வாறே சமயக்கறையை நீக்கி யாவருக்கும் பொதுவாகச் செய்து மென்மையும் நயமும் பொருந்தச் சுவையை யூட்டிச் செய்துள்ளார். குலப்பெருமை கூறுவோர் கூற்றுக்களையும் அங்ஙனமே எடுத்தாண்டு ஒழுக்கப் பெருமையினையே மிகுத்துக்காட்டிக் குலச்செருக்கைக் கவிழ்த்தார். எப்பொருளும் அவர் கைபட்ட மட்டிலே பொன்னாகத் திகழ்ந்துவிட்டது. அவருடைய மொழி பொய்யாமொழியே; அஃது என்றும் பொய்த்தல் இல்லை. அன்றும் உண்மை இன்றும்



உண்மை; இங்கும் உண்மை மற்றெங்கும் உண்மை. நாயனார் அருளிச் செய்த திருக்

குறள் இரத்தின தீபம் போல்வது. அதன் ஒளி என்றும் நின்று நிலவுவது. ஒவ்வொரு குறளும் ஒவ்வொரு மாணிக்கம் என்னலாம். அவை ஒவ்வொன்றும் விலை மதிக்கலாகாதவை.

திருக்குறள் நக்கீரனார், சாத்தனார் முதலான நல்லிசைப் புலவர்களாலும் கம்பர், திருத்தக்க தேவர் முதலியோராலும் பொன்போற் போற்றிக் கொள்ளப்பட்டது. அவருடைய அருங் குறட்பாக்களையும் அழகிய அடிகள் வடித்த சொற்கள் முதலிய வற்றையும் எடுத்தாளாத புலவர் ஒருவரு மிலர். உணவுப் பொருட் களுக்குச் சுவை யூட்டுவது போலவும் நுகர் பொருள்கட்கு மணமூட்டுவது போலவும புலவர் திருக்குறளைக் கொண்டு தமது நூல் களுக்குச் சுவையும் மணமும் ஊட்டுவர்,



வெற்றெனத் தொடுக்கும் தமது பாடல்களுக் குத் திருக்குறளால் அணி பூட்டுவர்.

இம்மட்டோ, திருக்குறள் தோன்றியதும் மக்கள் எல்லாரும் அதனைத் தமிழ்மறை என்

றும் பொதுமறை என்றும் போற்றினர். அந்தணர் மூடிவைத்த ஆதிமறை எமக்கு வேண்டாம் என்றனர். வேதம் ஆற்றலிற் குறையுமென மறையாக வைக்கப்பட்டது. திருக்குறளோ சொல்லச் சொல்ல ஆற்றலில் ஏற்றம் பெற்றது. “திருக்குறள் ஒன்று கற்றால் ஒருவனுக்குப் போதும். தமிழை அறியலாம்; உலகத்தை அறியலாம்; வாழ்க்கை உண்மையை அறியலாம். மறுமையை அடையலாம்; வீடுபேறும் எளிதிலே தானே வரும. இதற்கு உயிர்பிறப்பு வேண்டாம்; தீக்ஷை வேண்டாம்; சமஸ்காரம் வேண்டாம்; இடையிலே ஒரு குருவேண்டாம். ஆ! ஆ! இதன் பெரு



மையே பெருமை! இதனைப் பாடிய புலவரே புலவர். இவரே தெய்வப் புலவர்! இவரே பெருநாவலர்! இவரே முதற் பாவலர்! அந்தணர் ஒரு குலத்துக்கு ஒரு நீதி வகுத்தார், எம் பெருந்தகையோ யாவருக்கும் நீதி ஒன்றே என நாட்டினார்” என்று புலவர் புகழ்ந்தனர். மக்கள் களிதுள்ளி ஆரவாரித்தனர். அன்றும் யாவரும் போற்றினர்; இன்றும் யாவரும்

போற்றுகின்றனர். என்றும் யாவரும் போற்றுவர். ஆனால் வேதத்தின் நிலை என்னே! 'அன்று அதனைப் போற்றினர் பலர்! இன்று அதைப் போற்றுவார் சிலர்; நாளை அதனைப் போற்றுவார் இலர்.'

திருக்குறள் பதினெட்டு மொழிகளுக்கு மேலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. ஆங்கிலப் புலவராகிய ஜி. யூ. போப்பு என்பவர் வள்ளுவரை 'உலகந் தொழும் ஒப்பற்ற பெரு



மகன்' என்றும் அவர் கூறியவை யாவும் ஏசுநாதர் கூறியவற்றின் எதிரொலி யென்றும் வாயார வாழ்த்தினர். முகம்மதியர் திருக்குறளைத் தமது வேதமாகிய குரோனோடு ஒப்பக்கொண்டு பாராட்டுவர். இதன் கண் இல்லாத பொருளில்லை. இத்தகைய அரிய பெரிய நூலின் சொல்லழகு பொருளழகு முதலியவற்றைக் கூறின் இது மிகவும் விரியுமென் றஞ்சி இவ்வளவோடு நிறுத்துகின்றேன்.

## காலம் முதலியன

நாயனார் காலம் இற்றைக்கு ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் ஆகும். திருக்குறள் கடைச்சங்கத்திலே அரங்கேற்றப் பட்டதென்றும் அது தெய்விகம் பொருந்திய கன்மாப் பலகையிலே வைக்கப்பட்டதென்றும், அப்பலகை குவிந்து திருக்குறள் ஒன்றற்கே இடந்தந்து அதன் மேல் வீற்றிருந்த

புனைந்துரை 23

ஏனைச்சங்கப்புலவரைப் பொற்றாமரைத் தீர்த்தத்திலே வீழ்த்திய தென்றும் கூறுவர். இது வள்ளுவர் சங்கப்புலவர் யாவரினும் மேம்பட்டவர் என்பதை விளக்க எழுந்த யோர் புனைந்துரை என்பது வெளிப்படை.

வள்ளுவர் மதுரையிலே பிறந்து மயிலையிலே வளர்ந்தனர் என்ப. திருமயிலையிலே அவருக்கு ஒரு திருக்கோவில் திகழ்கிறது. அங்கே சமைக்கப்பட்டுள்ள திருவுருவம் பெருமிதத் தோற்றத் துடன் அழகாக ஒளிர்கின்றது.

திருக்குறளுக்குப் பலர் உரை உண்டு. அவை தம்முள் பரிமேலழகர் உரையே தலை சிறந்தது. மணக்குடவர் உரை அறத்துப் பாலுக்கு மட்டும் ஸ்ரீ V. O. சிதம்பரம் பிள்ளை அவர்களால் வெளியிடப்பட்டது.



தருமர் உரை சிலர் தம் பால் உளதாக உரைக்கின்றனர். பருதிப் பெருமாள் உரை ராஜாங்க கையெழுத்துப் பிரதிச் சாலையிலும் உளது.

திருக்குறளுக்கு ஆயிரம் உரை வந்தாலும அதன் ஆழத்தை அளவிட்டு உரைத்தல் சாலாது. பரிமேலழகர் உரையிலும் பொருந்தாதன உள. உரையை விட்டு மூலத்திலேயே எப்பொழுதும் அறிவை நுழைத்துப் பாடுபடல் வேண்டும். இல்லையேல் உண்மை இன்னதென அறிய இயலாது. புலவர் திருக்குறள் மூலத்திலே மேன் மேலும உழைத்துப் பலப்பல ஆராய்ச்சி நூற்களை வெளியிடுவரேல்

உலகம் விழூப்பயன் எய்தும்.

இங்ஙனம்,

மணி. திருநாவுக்கரசன்

# திருக்குறள் மூலம்

## பாலிய லதிகார வகராதி

| பால் | பக்கம். | அதிகாரம் | பக்கம் |
|---|---|---|---|
| அறத்துப்பால் | 1 | அருளுடைமை | 30 |
| காமத்துப்பால் | 135 | அலரறிவுறுத்தல் | 142 |
| பொருட்பால் | 48 | அவர்வயின் விதும்பல் | 157 |
| **இயல்** | | அவாவறுத்தல் | 45 |
| அங்கவியல் | 78 | அவையஞ்சாமை | 89 |
| அரசியல் | 48 | அவையறிதல் | 88 |
| இல்லறவியல் | 6 | அழுக்காறாமை | 21 |
| ஒழிபியல் | 117 | அறன்வலியுறுத்தல் | 5 |
| களவியல் | 135 | அறிவுடைமை | 53 |
| கற்பியல் | 144 | அன்புடைமை | 10 |
| துறவறவியல் | 30 | ஆள்வினை யுடைமை | 76 |
| **அதிகாரம்** | | இகல் | 105 |
| அடக்கமுடைமை | 16 | இடனறிதல் | 61 |
| அமைச்சு | 78 | இடுக்கணழியாமை | 77 |
| அரண் | 92 | | |



உ

கடவுள் துணை

# திருக்குறள்

## அறத்துப்பால்

## பாயிரம்

### க. கடவுள் வாழ்த்து

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு. 1

கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின். 2

மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார். 3

வேண்டுதல்வேண் டாமை யிலானடி
சேர்ந்தார்க் கியாண்டு மிடும்பை யில. 4



இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு. 5

பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க

நெறிநின்றார் நீடுவாழ் வார். 6

தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க்
கல்லான் மனக்கவலை மாற்ற லரிது. 7

அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற்
பிறவாழி நீந்த லரிது. 8

கோளில் பொறியிற் குணமிலவே
யெண்குணத்தான் றாளை வணங்காத் தலை. 9

பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார். 10

## 2. வான்சிறப்பு

வானின் றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென்றுணரற் பாற்று. 1

துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித்
துப்பார்க்குத் துப்பாய தூஉ மழை. 2



விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசி. 3

ஏரி னுழாஅ ருழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால். 4

கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்

மற்றாங்கே எடுப்பதூஉ மெல்லா மழை. 5
விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது. 6
நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந்
தடிந்தெழிலி தானல்கா தாகி விடின். 7
சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு. 8
தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின். 9
நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு. 10

---





## 3 நீத்தார் பெருமை

ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு. 1

துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று. 2

இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு. 3

உரனென்னுந் தோட்டியா னோரைந்துங்
காப்பான்வரனென்னும்வைப்பிற்கோர்வித்து. 4

ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமா
னிந்திரனே சாலுங் கரி. 5

செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார். 6

சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு. 7

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும். 8



குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது. 9

அந்தணரென் போரறவோர் மற்றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான். 10

## 4. அறன்வலி யுறுத்தல்

சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ வுயிர்க்கு. 1

அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூங்கில்லை கேடு. 2

ஒல்லும் வகையா னறவினை யோவாதே
செல்லுமவா யெல்லாஞ் செயல். 3

மனத்துக்கண் மாசில னாத லனைத்தற
னாகுல நீர பிற. 4

அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொ னான்கு
மிழுக்கா வியன்ற தறம். 5

அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை. 6



அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை. 7

வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல். 8

அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில. 9

செயற்பால தோரு மறனே யொருவற்
குயற்பால தோரும் பழி. 10

—

# இல்லறவியல்

## 5. இல்வாழ்க்கை

இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு
நல்லாற்றி னின்ற துணை. 1

துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கு
மில்வாழ்வா னென்பான் றுணை. 2

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க
லானென்றாங் கைம்புலத்தா றோம்ப றலை. 3



பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின்
வாழ்க்கை வழியெஞ்ச லெஞ்ஞான்று மில். 4

அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை
பண்பும் பயனு மது. 5

அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற்
புறத்தாற்றிற் போஒய்ப் பெறுவ தெவன். 6

இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை. 7

ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை
நோற்பாரி னோன்மை யுடைத்து. 8

அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்
பிறன்பழிப்ப தில்லாயி னன்று. 9

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்
வானுறையுந் தெய்வத்துள் வைக்கப் படும். 10

## 6. வாழ்க்கைத் துணைநலம்

மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற்
கொண்டான்வளத்தக்காள்வாழ்க்கைத்துணை 1



மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின்
வாழ்க்கை யெனைமாட்சித் தாயினு மில். 2

இல்லதெ னில்லவண் மாண்பானா லுள்ளதெ
னில்லவண் மாணாக் கடை. 3

பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின். 4

தெய்வந் தொழாஅள் கொழுநற்
றொழுதெழுவாள் பெய்யெனப் பெய்யு மழை. 5

தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகை
சான்ற சொற்காத்துச் சோர்விலாள் பெண். 6

சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை. 7

பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர்
பெருஞ்சிறப்புப் புத்தேளிர் வாழு முலகு. 8

புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன்
னேறுபோற் பீடு நடை. 9

மங்கல மென்ப மனைமாட்சி மற்றத
னன்கல நன்மக்கட் பேறு. 10

## 7 புதல்வரைப் பெறுதல்

பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற. 1

எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின். 2

தம்பொரு ளென்பதம் மக்க ளவர்பொரு
டந்தம் வினையான் வரும். 3

அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ். 4

மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு. 5

குழலினி தியாழினி தென்பதம் மக்கண்
மழலைச்சொற் கேளா தவர். 6

தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல். 7

தம்மிற்றம் மக்க ளறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது. 8

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய். 9



மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை
யென்னோற்றான் கொல்லெனுஞ் சொல். 10

## 8. அன்புடைமை

அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்
புன்கணீர் பூச றரும். 1

அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா
ரென்பு முரியர் பிறர்க்கு. 2

அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு. 3

அன்பீனு மார்வ முடைமை யதுவீனு
நண்பென்னு நாடாச் சிறப்பு. 4

அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு. 5

அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார்
மறத்திற்கு மஃதே துணை. 6

என்பி லதனை வெயில்போலக் காயுமே
யன்பி லதனை யறம். 7



அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றன் மரந்தளிர்த் தற்று. 8

புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை
யகத்துறுப் பன்பி லவர்க்கு. 9

அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த வுடம்பு. 10

## 9. விருந்தோம்பல்

இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்
தோம்பி வேளாண்மை செய்தற் பொருட்டு 1

விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று. 2

வருவிருந்து வைகலு மோம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுத லின்று. 3

அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து
நல்விருந் தோம்புவா னில். 4

வித்து மிடல்வேண்டுங் கொல்லோ
விருந்தோம்பி மிச்சின் மிசைவான் புலம். 5



செல்விருந் தோம்பிவருவிருந்து பார்த்திருப்பா
னல்விருந்து வானத் தவர்க்கு. 6

இனைத்துணைத் தென்பதொன் றில்லை
விருந்தின் றுணைத்துணை வேள்விப் பயன். 7

பரிந்தோம்பிப் பற்றற்றே மென்பர்
விருந்தோம்பி வேள்வி தலைப்படா தார். 8

உடைமையு ளின்மை விருந்தோம்ப லோம்பா
மடமை மடவார்க ணுண்டு. 9

மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து. 10

## 10. இனியவை கூறல்

இன்சொலா லீர மளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல். 1

அகனமர்ந் தீதலி னன்றே முகனமர்ந்
தின்சொல னாகப் பெறின். 2

முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானா
மின்சொ லினதே யறம். 3



துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும்
யார்மாட்டு மின்புறூஉ மின்சொ லவர்க்கு. 4

பணிவுடைய னின்சொல னாத லொருவற்
கணியல்ல மற்றுப் பிற. 5

அல்லவை தேய வறம்பெருகு நல்லவை
நாடி யினிய சொலின். 6

நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று
பண்பிற் றலைப்பிரியாச் சொல். 7

சிறுமையு ணீங்கிய வின்சொன் மறுமையு
மிம்மையு மின்பந் தரும். 8

இன்சொ லினிதீன்றல் காண்பா
னெவன்கொலோ வன்சொல் வழங்கு வது. 9

இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. 10

## 11. செய்ந்நன்றி யறிதல்

செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது. 1



காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினு
ஞாலத்தின் மாணப் பெரிது. 2

பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கி
னன்மை கடலிற் பெரிது. 3

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார். 4

உதவி வரைத்தன் றுதவி யுதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து. 5

மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துட் டுப்பாயார் நட்பு. 6

எழுமை யெழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு. 7

நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று. 8

கொன்றன்ன வின்னா செயினு மவர்செய்த
வொன்றுநன் றுள்ளக் கெடும். 9

எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா
முய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு. 10

## 12. நடுவுநிலைமை

தகுதி யெனவொன்று நன்றே பகுதியாற்
பாற்பட் டொழுகப் பெறின். 1

செப்ப முடையவ னாக்கஞ் சிதைவின்றி
யெச்சத்திற் கேமாப் புடைத்து. 2

நன்றே தரினு நடுவிகந்தா மாக்கத்தை
யன்றே யொழிய விடல். 3

தக்கார் தகவில ரென்ப தவரவ
ரெச்சத்தாற் காணப் படும். 4

கேடும் பெருக்கமு மில்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி. 5

கெடுவல்யா னென்ப தறிகதன் னெஞ்ச
நடுவொரீஇ யல்ல செயின். 6

கெடுவாக வையா துலக நடுவாக
நன்றிக்கட் டங்கியான் றாழ்வு. 7

சமன்செய்து சீர்தூக்குங்கோல்போ லமைந்
தொருபாற் கோடாமை சான்றோர்க் கணி. 8

சொற்கோட்ட மில்லது செப்ப மொருதலையா
வுட்கோட்ட மின்மை பெறின். 9

வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின். 10

## 13. அடக்கமுடைமை

அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை
யாரிரு ளுய்த்து விடும். 1

காக்க பொருளா வடக்கத்தை யாக்க
மதனினூங் கில்லை யுயிர்க்கு. 2

செறிவறிந்து சீர்மை பயக்கு மறிவறிந்
தாற்றி னடங்கப் பெறின். 3

நிலையிற் றிரியா தடங்கியான் றோற்ற
மலையினு மாணப் பெரிது. 4

எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து. 5

ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து. 6

யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. 7

ஒன்றானுந் தீச்சொற் பொருட் பயனுண்டாயி
னன்றாகா தாகி விடும். 8

தீயினாற் சுட்டபு ணுள்ளாறு மாறாதே
நாவினாற் சுட்ட வடு. 9

கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி
யறம்பார்க்கு மாற்றி னுழைந்து. 10

## 14. ஒழுக்கமுடைமை

ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்க
முயிரினு மோம்பப் படும். 1

பரிந்தோம்பிக் காக்க வொழுக்கந்
தெரிந்தோம்பித் தேரினு மஃதே துணை. 2

ஒழுக்க முடைமை குடிமை யிழுக்க
மிழிந்த பிறப்பாய்விடும். 3

மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும். 4

அழுக்கா றுடையான்க ணாக்கம்போன் றில்லை
யொழுக்க மிலான்க ணுயர்வு. 5

எழுக்கத்தி னெல்கா ருரவோ ரிழுக்கத்தி
னேதம் படுபாக் கறிந்து. 6

ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை யிழுக்கத்தி
னெய்துவ ரெய்தாப் பழி. 7

நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்க
மென்று மிடும்பை தரும். 8

ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல். 9

உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார். 10

## 15. பிறனில் விழையாமை

பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை
ஞாலத் தறம்பொருள் கண்டார்க ணில். 1

அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையா ரில. 2

விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரிற்
றீமை புரிந்தொழுகு வார். 3

எனைத்துணைய ராயினு மென்னாந்
தினைத்துணையுந் தேரான் பிறனில் புகல். 4

எளிதென வில்லிறப்பா னெய்துமெஞ்
ஞான்றும் விளியாது நிற்கும் பழி. 5

பகைபாவ மச்சம் பழியென நான்கு
மிகவாவா மில்லிறப்பான் கண். 6

அறனியலா னில்வாழ்வா னென்பான்
பிறனியலாள் பெண்மை நயவா தவன். 7

பிறன்மனை நோக்காத பேராண்மை
சான்றோர்க்கறனொன்றோ வான்றவொழுக்கு 8

நலக்குரியார் யாரெனி னாமநீர் வைப்பிற்
பிறற்குரியா டோடோயா தார். 9

அறன்வரையா னல்ல செயினும்
பிறன்வரையாள்பெண்மை நயவாமைநன்று. 10

## 16. பொறையுடைமை

அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
யிகழ்வார்ப் பொறுத்த றலை. 1



பொறுத்த லிறப்பினை யென்று மதனை
மறத்த லதனினு நன்று. 2

இன்மையு ளின்மை விருந்தொரால்
வன்மையுள் வன்மை மடவார்ப் பொறை. 3

நிறையுடைமை நீங்காமை வேண்டிற்
பொறையுடைமை போற்றி யொழுகப் படும். 4

ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து. 5

ஒறுத்தார்க் கொருநாளை யின்பம்
பொறுத்தார்க்குப் பொன்றுந் துணையும் புகழ். 6

திறனல்ல தற்பிறர் செய்யினு நோநொந்
தறனல்ல செய்யாமை நன்று. 7

மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தம்
தகுதியான் வென்று விடல். 8

துறந்தாரிற் றூய்மை யுடைய ரிறந்தார்வா
யின்னாச்சொ னோற்கிற் பவர். 9

உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லு
மின்னாச்சொ னோற்பாரிற் பின். 10

## 17. அழுக்காறாமை

ஒழுக்காறுக் கொள்க வொருவன்றன்
னெஞ்சத் தழுக்கா றிலாத வியல்பு. 1

விழுப்பேற்றி னஃதொப்ப தில்லையார் மாட்டு
மழுக்காற்றி னன்மை பெறின். 2

அறனாக்கம் வேண்டாதா னென்பான்
பிறனாக்கம் பேணா தழுக்கறுப் பான். 3

அழுக்காற்றி னல்லவை செய்யா ரிழுக்காற்றி
னேதம் படுபாக் கறிந்து. 4

அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார்
வழுக்கியுங் கேடீன் பது. 5

கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉ
முண்பதூஉ மின்றிக் கெடும். 6

அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவ
டவ்வையைக் காட்டி விடும். 7

அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும். 8

அவ்விய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்
கேடு நினைக்கப் படும். 9

அழுக்கற் றகன்றாரு மில்லையஃ தில்லார்
பெருக்கத்திற் றீர்ந்தாரு மில். 10

## 18. வெஃகாமை

நடுவின்றி நன்பொருள் வெஃகிற்
குடிபொன்றிக் குற்றமு மாங்கே தரும். 1

படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர். 2

சிற்றின்பம் வெஃகி யறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர். 3

இலமென்று வெஃகுதல் செய்யார்
புலம்வென்ற புன்மையில் காட்சி யவர். 4

அஃகி யகன்ற வறிவென்னும் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின். 5

அருள்வெஃகி யாற்றின்க ணின்றான்
பொருள்வெஃகிப் பொல்லாத சூழக் கெடும். 6

வேண்டற்க வெஃகியா மாக்கம் விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன். 7

அஃகாமை செல்வத்திற் கியாதெனின்
வெஃகாமை வேண்டும் பிறன்கைப் பொருள். 8

அறனறிந்து வெஃகா வறிவுடையார்ச் சேருந்
திறனறிந் தாங்கே திரு. 9

இறலீனு மெண்ணாது வெஃகின் விறலீனும்
வேண்டாமை யென்னுஞ் செருக்கு. 10

## 19. புறங்கூறாமை

அறங்கூறா னல்ல செயினு மொருவன்
புறங்கூறா னென்ற லினிது. 1

அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே
புறனழீஇப் பொய்த்து நகை. 2

புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாத
லறங்கூறு மாக்கந் தரும். 3

கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ்
சொல்லற்க முன்னின்று பின்னோக்காச் சொல். 4

அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மை
புறஞ்சொல்லும் புன்மையாற் காணப் படும். 5

பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளுந்
திறன்றெரிந்து கூறப் படும். 6

பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாட றேற்றா தவர். 7

துன்னியார் குற்றமுந் தூற்று மரபினா
ரென்னைகொ லேதிலார் மாட்டு. 8

அறனோக்கி யாற்றுங்கொல் வையம்
புறனோக்கிப் புன்சொ லுரைப்பான் பொறை. 9

எதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பிற்
றீதுண்டோ மன்னு முயிர்க்கு. 10

## 20. பயனில சொல்லாமை

பல்லார் முனியப் பயனில சொல்லுவா
னெல்லாரு மெள்ளப் படும். 1

பயனில பல்லார்முற் சொல்ல னயனில
நட்டார்கட் செய்தலிற் றீது. 2

நயனில னென்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கு முரை. 3

நயன்சாரா நன்மையி னீக்கும் பயன்சாராப்
பண்பில்சொற் பல்லா ரகத்து. 4

சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின். 5

பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல். 6

நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று. 7

அரும்பய னாயு மறிவினார் சொல்லார்
பெரும்பய னில்லாத சொல். 8

பொருடீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார்
மருடீர்ந்த மாசறு காட்சி யவர். 9

சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல். 10

## 21. தீவினையச்சம்

தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்
தீவினை யென்னுஞ் செருக்கு. 1

தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும். 2

அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல். 3

மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழி
னறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு. 4

இலனென்று தீயவை செய்யற்க செய்யி
னிலனாகு மற்றும் பெயர்த்து. 5

தீப்பால தான்பிறர்கட் செய்யற்க நோய்ப்பால
தன்னை யடல்வேண்டா தான். 6

எனைப்பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை
வீயாது பின்சென் றடும். 7

தீயவை செய்தார் கெடுத னிழறன்னை
வீயா தடியுறைந் தற்று. 8

தன்னைத்தான் காத லனாயி னெனைத்தொன்றுந்
துன்னற்க தீவினைப் பால். 9

அருங்கேட னென்ப தறிக மருங்கோடித்
தீவினை செய்யா னெனின். 10

## 22. ஒப்புரவறிதல்

கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு. 1

தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு. 2

புத்தே ளுலகத்து மீண்டும் பெறலரிதே
யொப்புரவி னல்ல பிற. 3

ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும். 4

ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் திரு. 5

பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வ
நயனுடை யான்கட் படின். 6

மருந்தாகித் தப்பா மரத்தற்றாற் செல்வம்
பெருந்தகை யான்கட் படின். 7

இடனில் பருவத்து மொப்புரவிற் சொல்கார்
கடனறி காட்சி யவர். 8

நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயுநீர
செய்யா தமைகலா வாறு. 9



ஒப்புரவி னால்வருங் கேடெனி னஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து. 10

## 23. ஈகை

வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாங்
குறியெதிர்ப்பை நீர துடைத்து. 1
நல்லா றெனினுங் கொளறீது மேலுலக
மில்லெனினு மீதலே நன்று. 2
இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள. 3
இன்னா திரக்கப் படுத லிரந்தவ
ரின்முகங் காணு மளவு. 4
ஆற்றுவா ராற்றல் பசியாற்ற லப்பசியை
மாற்றுவா ராற்றலிற் பின். 5
அற்றா ரழிபசி தீர்த்த லஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி. 6
பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்
தீப்பிணி தீண்ட லரிது. 7

ஈத்துவக்கு மின்ப மறியார்கொ றாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர் 8

இரத்தலி னின்னாது மன்ற நிரப்பிய
தாமே தமிய ருணல். 9

சாதலி னின்னாத தில்லை யினிததூஉ
மீத லியையாக் கடை. 10

## 24. புகழ்

ஈத லிசைபட வாழ்த லதுவல்ல
தூதிய மில்லை யுயிர்க்கு. 1

உரைப்பா ருரைப்பவை யெல்லா
மிரப்பார்க்கொன் றீவார்மே னிற்கும் புகழ். 2

ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்றாது நிற்பதொன் றில். 3

நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்
போற்றாது புத்தே ளுலகு. 4

நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது. 5

தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று. 6

புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
யிகழ்வாரை நோவ தெவன். 7

வசையென்ப வையத்தார்க் கெல்லா
மிசையென்னு மெச்சம் பெறாஅ விடின். 8

வசையிலா வண்பயன் குன்று மிசையிலா
யாக்கை பொறுத்த நிலம். 9

வசையொழிய வாழ்வாரே வாழ்வா
ரிசையொழிய வாழ்வாரே வாழா தவர். 10

---

# துறவறவியல்

## 25. அருளுடைமை

அருட்செல்வஞ்செல்வத்துட்செல்வம்
பொருட்செல்வம் பூரியார் கண்ணு முள. 1

நல்லாற்றா னாடி யருளாள்க பல்லாற்றாற்
றேரினு மஃதே துணை. 2

அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை
யிருள்சேர்ந்த வின்னா வுலகம் புகல். 3

மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை. 4

அல்ல லருளாள்வார்க் கில்லை வளிவழங்கு
மல்லன்மா ஞாலங் கரி. 5

பொருணீங்கிப் பொச்சாந்தா ரென்ப
ரருணீங்கி யல்லவை செய்தொழுகு வார். 6

அருளில்லார்க் கவ்வுலக மில்லை
பொருளில்லார்க் கிவ்வுலக மில்லா கியாங்கு. 7

பொருளற்றார் பூப்ப ரொருகா லருளற்றா
ரற்றார்மற் றாத லரிது. 8

தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றாற்
றேரி னருளாதான் செய்யு மறம். 9

வலியார்முற் றன்னை நினைக்கதான் றன்னின்
மெலியார்மேற் செல்லு மிடத்து. 10

---

# 26. புலான் மறுத்தல்

தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி
தூனுண்பா னெங்ஙன மாளு மருள். 1

பொருளாட்சி போற்றாதார்க் கில்லை
யருளாட்சி யாங்கில்லை யூன்றின் பவர்க்கு. 2

படைகொண்டார் நெஞ்சம்போ னன்றூக்கா
தொன்ற னுடல்சுவை யுண்டார் மனம். 3

அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல். 4

உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
வண்ணாத்தல் செய்யா தளறு. 5

தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின்
யாரும் விலைப்பொருட்டா லூன்றருவா ரில். 6

உண்ணாமை வேண்டும் புலாஅல்
பிறிதொன்றன் புண்ண துணர்வார்ப் பெறின். 7

செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணா
ருயிரிற் றலைப்பிரிந்த வூன். 8

அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
னுயிர்செகுத் துண்ணாமை நன்று. 9

கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
யெல்லா வுயிருந் தொழும். 10

## 27. தவம்

உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண்
செய்யாமை யற்றே தவத்திற் குரு. 1

தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
யஃதிலார் மேற்கொள் வது. 2

துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி
மறந்தார்கொன் மற்றை யவர்க டவம். 3

ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலு
மெண்ணிற் றவத்தான் வரும். 4

வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும். 5

தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற்
றல்லா ரவஞ்செய்வா ராசையுட் பட்டு. 6



சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந்
துன்பஞ் சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.
தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய
மன்னுயி ரெல்லாந் தொழும். 8

கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலி
னாற்ற றலைப்பட் டவர்க்கு. 9
இலர்பல ராகிய காரண நோற்பார்
சிலர்பலர் நோலா தவர். 10

## 28. கூடாவொழுக்கம்

வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்க
ளைந்து மகத்தே நகும். 1
வானுயர் தோற்ற மெவன்செய்யுந்
தன்னெஞ்சந் தானறி குற்றப் படின். 2
வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று. 3

தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று. 4



பற்றற்றே மென்பார் படிற்றொழுக்க
மெற்றெற்றென் றேதம் பலவுந் தரும். 5

நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணா ரில். 6

புறங்குன்றி கண்டனைய ரேனு மகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து. 7

மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர். 8

கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன
வினைபடு பாலாற் கொளல். 9

மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின். 10

## 29. கள்ளாமை

எள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்
தொன்றுங் கள்ளாமை காக்கதன் னெஞ்சு. 1

உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல். 2

3



களவினா லாகிய வாக்க மளவிறந்
தாவது போலக் கெடும். 3

களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும். 4

அருள்கருதி யன்புடைய ராதல் பொருள்
கருதிப் பொச்சாப்புப் பார்ப்பார்க ணில். 5

அளவின்க ணின்றொழுக லாற்றார் களவின்கட்
கன்றிய காத லவர். 6

களவென்னுங் காரறி வாண்மை யளவென்று
மாற்றல் புரிந்தார்க ணில். 7

அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்குங்
களவறிந்தார் நெஞ்சிற் கரவு. 8

அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்றா தவர். 9

கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு. 10

## 30. வாய்மை

வாய்மை யெனப்படுவ தியாதெனின்
யாதொன்றுந் தீமை யிலாத சொலல். 1

பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின். 2

தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
றன்னெஞ்சே தன்னைச் சுடும். 3

உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா
ருள்ளத்து ளெல்லா முளன். 4

மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை. 5

பொய்யாமை யன்ன புகழில்லை யெய்யாமை
யெல்லா வறமுந் தரும். 6

பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று. 7

புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும். 8

எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு. 9



யாமெய்யாக் கண்டவற்று ளில்லையெனைத்
தொன்றும் வாய்மையி னல்ல பிற. 10

## 31. வெகுளாமை

செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பா
னல்லிடத்துக் காக்கினென் காவாக்கா லென். 1

செல்லா விடத்துச் சினந்தீது செல்லிடத்து
மில்லதனிற் றீய பிற. 2

மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய
பிறத்த லதனான் வரும். 3

நகையு முவகையுங் கொல்லுஞ் சினத்திற்
பகையு முளவோ பிற. 4

தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க
காவாக்காற் றன்னையே கொல்லுஞ் சினம். 5

சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி
யினமென்னு மேமப் புணையைச் சுடும். 6

சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று. 7

இணரெரி தோய்வன்ன வின்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று. 8

உள்ளிய தெல்லா முடனெய்து முள்ளத்தா
லுள்ளான் வெகுளி யெனின். 9

இறந்தா ரிறந்தா ரனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை. 10

## 32. இன்னா செய்யாமை

சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள். 1

கறுத்தின்னா செய்தவக் கண்ணு மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள். 2

செய்யாமற் செற்றார்க்கு மின்னாத செய்தபி
னுய்யா விழுமந் தரும். 3

இன்னா செய்தாரை யொறுத்த லவர்நாண
நன்னயஞ் செய்து விடல். 4

அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய்போற் போற்றாக் கடை. 5





இன்னா வெனத்தா னுணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கட் செயல். 6

எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கு
மனத்தானா மாணா செய்யாமை தலை. 7

தன்னுயிர்க் கின்னாமை தானறிவா
னென்கொலோ மன்னுயிர்க் கின்னா செயல். 8

பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும். 9

நோயெல்லா நோய்செய்தார் மேலவா
நோய்செய்யார் நோயின்மை வேண்டு பவர். 10

## 33. கொல்லாமை

அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும். 1

பகுத்துண்டு பல்லுயி ரோம்புத னூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை. 2

ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று. 3



நல்லா றெனப்படுவ தியாதெனின்
யாதொன்றுங் கொல்லாமை சூழு நெறி. 4

நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் றலை. 5

கொல்லாமை மேற்கொண் டொழுகுவான்
வாழ்நாண்மேற்செல்லா துயிருண்ணுங்கூற்று. 6

தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை. 7

நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ்
சான்றோர்க்குக் கொன்றாகு மாக்கங் கடை. 8

கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து. 9

உயிருடம்பி னீக்கியா ரென்ப செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர். 10

# ஞானம்

## 34. நிலையாமை

நில்லா தவற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை. 1



கூத்தாட் டவைக்குழாத் தற்றே
பெருஞ்செல்வம் போக்கு மதுவிளிந் தற்று. 2

அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றா
லற்குப வாங்கே செயல். 3

நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின். 4

நாச்செற்று விக்குள்மேல் வாராமு னல்வினை
மேற்சென்று செய்யப் படும். 5

நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு. 6

ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல. 7

குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
யுடம்போ டுயிரிடை நட்பு. 8

உறங்குவ தூ போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு. 9

புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட்
டுச்சி லிருந்த வுயிர்க்கு. 10

## 35. துறவு

யாதனின் யாதனி னீங்கியா னோத
லதினி னதனி னிலன். 1

வேண்டி னுண் டாகத் துறக்க துறந்தபி
னீண்டியற் பால பல. 2

அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்
வேண்டும் வேண்டிய வெல்லா மொருங்கு. 3

இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை
யுடைமை மயலாகு மற்றும் பெயர்த்து. 4

மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை. 5

யானென தென்னுஞ் செருக்கறுப்பான்
வானோர்க் குயர்ந்த வுலகம் புகும். 6

பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு. 7

தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர். 8

பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும். 9



பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு. 10

## 36. மெய்யுணர்தல்

பொருளல் லவற்றைப் பொருளென் றுணரு
மருளானா மாணாப் பிறப்பு. 1

இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு. 2

ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து. 3

